பத்தி சாரமா யுறுவது பளகறு வாய்மை
யித்த ரத்ததென் றுணர்த்துவ திக்குவ லயத்தாய்
மெத்து மாசையில் வினவிட வராகவெம் பெருமா
னுரைத்த வன்பினி லுரைத்ததென் றுலெவ னுரைக்கேன். ருரு

வான மேவிய பிரளய வாரியில் வதிந்த
மான வின்னலை யவனிமா திக்கதை மகிழ்வி
னேன மாயினு னியம்பிடக் கேட்டகன் றனளே
லான வைபவ மென்னென வறைகுவன் யானே. ருசு

என்று சூதமா முனிவர னிருகணீர் வார
நன்று கூறிட நைமிச முனிவரர் நடலை
யன்று நீத்தனர் முனிவர னடிமுடி முடித்துத்
துன்று தோத்திரஞ் சொற்றனர் தூமறை மறையால். ருஎ

சவுன காதியர் பன்முறை தாழ்ந்தெழூஉப் போற்றத்
தவன னுப்புறுஞ் சூதமா முனிவரன் றவிர்ந்தான்
கவன மாவெனக் கதழ்மனந் தகைஇக்கடுந் தவஞ்செய்
தவனி போற்றவம் முனிவர ரங்ஙன மிருந்தார். ருஅ

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாழிநம் பாடு வான்சீர் வாழியன் னவன்றன் காதை
வாழிவை ணவச்சின் னங்கள் வாழியொண் மறைய றங்கள்
வாழியெம் வராக நாதன் வாழிவண் புவனி மாது
வாழிமன் னவன்றன் செங்கோல் வாழியா ரியன்றாண் மன்றே.

---

கைசிகப்பண்ணுற்கதியடைந்தவத்தியாயமுற்றிற்று.

கைசிகவேகாதசிபுராணமுற்றுப்பெற்றது.

ஆகச்செய்யுள்—உ௮0.

---

நம்பாடுவார்திருவடிகளேசரணம்.

ஆசாரியன் திருவடிகள் அநுதினம் வாழ்க.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| எ | உஉ | க | குகந்த | குந்த |
| அ | உரு | ௪ | கொள்வா | கொள்வார். |
| கரு | க | ௪ | மூர்திக்கு | வூர்திக்கு |